# திருப்புகழமிர்தம்




ஆசிரியர்

## கிருபானந்தவாரி

சாதாரண

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

மார்கழி

நமது டெலிபோன் எண் 2 0 2 7 8

---

உ
முருகா

## எமது புதிய வெளியீடு

திருப்புகழ் விரிவுரை ஏழாவது தொகுதி பஞ்சபூத ஸ்தலங்களில் காஞ்சிபுரம் பாடல்கள் 44-ம் திருவானைக்காப் பாடல்கள் 14-ம் ஆகமொத்தம் 58 திருப்புகழ்ப் பாடல்களுக்கு விரிவான உரை அடங்கியது. டெமி 1/8 அளவில் 300 பக்கங்கள்.

**விலை ரூ. 4-00. தபாற் செலவு 1-40.**

## அமுத நிலையம் வெளியீடு

**திருமுருகாற்றுப்படை விளக்கம்.** திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் எழுதிய விரிவான விளக்க உரையுடன். அருஞ்சொற் பொருள் அகராதியுடன் கூடியது. கிரௌன் 1/8 அளவில் 444 பக்கங்கள்.

**விலை ரூ. 8-00. தபாற் செலவு ரூ. 1-40**

## வெளியார் பதிப்பு

# வாழும் வழி

ஆசிரியர்: திருமுருக கிருபானந்தவாரி அவர்கள். வாழும் வழி, கடவுளை நம்புவது அறிவுடைமை, கடவுள், வழிபாடு, அறம், ஞானம், இல்லறம், ஜீவகாருண்யம், ஒழுக்கம், அரசியல் இந்துமதம், பொது—எனப் பன்னிரண்டு தலைப்புக்களில் எழுதிய சிறு சிறு கட்டுரைகளைக் கொண்டது கண்கவர் பதிப்பு. கிரௌன் அளவில் 128 பக்கங்கள் கொண்டது. விலை ரூ. 1-50 (தபாற் செலவு பதிவுத் தபாலில் ரூ. 1-15)

மேற்படி புத்தகங்கள் யாவும் நமது காரியாலயத்தில் கிடைக்கும்.

## அச்சில் உள்ளவை

1. கந்தரலங்காரம் (உரையுடன்)
நான்காவது பதிப்பு 1970 டிசம்பர் இறுதியில்வெளி வரலாம்.
2. பன்னிருதிருமுறைத்திரட்டு
இரண்டாவது பதிப்பு. ஜனவரி 1971ல் கிடைக்கும்

மானேஜர், திருப்புகழமிர்தம் காரியாலயம்,
89, சிங்கண்ண செட்டித் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை—2.

உ

ஓம் குஹாய நம !



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றாள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"





| மலர் 35 | சாதாரண ஹு—மார்கழி மீ<br>டிசம்பர் 1970 | இதழ் 9 |
|---|---|---|



## திருப்புகழ்

### திருவருணை

தமிழோதிய குயிலோமயி லாண்டலை யாம்புறவங்
கிளிகாடையி னணிலேரளி யாங்குரல் வாய்ந்ததிசெந்
தகுமாமிட றெலியாரித மாஞ்சுளே தேன்கனியின்
சுவைசேருந்

தனபாரமு மலையாமென வோங்கிட மாம்பொறிசிந்
திடவேல்விழி நுதலோசிலை வான்பிறை மாந்துளிரின்
சரிரார்குழ லிருளாநகை யோங்கிய வான்கதிரின்
சுடர்பாயக்

குமிழ்நாசியின் முகமோமதி யாங்குளிர் சேங்கமலஞ்
சரிதோடிணை செவியாடுச லாங்கள பூங்கமுகங்
கொடு நூலிடை யுடையாரன மாம்ப்ரியர்
மாண்புரிமின் கொடிமாதர்

குணமோடம ளியினுடினு மோங்கிய பூங்கமலஞ்
சரணூபுர குரலோசையு மேந்திடு மாண்டலையின்
கொடியோடெழு தரிதாம்வடி வோங்கிய
பாங்கையுமன் தகையேனே

திமிதோதிமி திமிதோதிமி தாங்கண தீங்கணதொந்
தகுதோதகு தகுதோதகு டாங்குட தீங்கடதொந்
திகுடோடிமி டிமிடோடிமி டாங்குட டீந்தகமென்
றியல்பேரி

திசைமூடுக கடலேழ்பொடி யாம்படி யோங்கிய வெங்
கரிதேர்பரி யசுரார்கள மாண்டிட நீண்டரவின்
சிரமீள்பட குவடோதுகள் வான்பெற வாங்கியவண்
கதிர்வேலா

கமழ்மாவிதழ் சடையாரடி யேன்துயர் தீர்ந்திடவெண்
தழல்மாபொடி யருள்வோரடல் மான்துடி
தாங்கியவண்
கரர்மாடரு ளுமையாளுமை யீன்றவளீன்றருள்மென்
குரவோனே

கடையேனிரு வினைநோய்மல மாண்டிட தீண்டியவொண்
சுகமோகினி வளிநாயகி பாங்கனெ னும்பகர்மின்
கலைநூலுடை முருகாவழ லோங்கியவோங்கலின்வண்
பெருமாளே.

## பதவுரை

திமிதோதிமி திமிதோதிமி தாங்கண தீங்கண தொந் தகுதோ தகு தகுதோதகு டாங்குட தீங்கட தொந் திகுடோடிமி டிமிடோ டிமி டாங்குட டீந்தகம் என்று=திமிதோதிமி......டாங்குட டீந்த கம் என்று, இயல்பேரி=ஒலிக்கின்ற பேரி என்ற வாத்தியம், திசை மூடுக=திசைகள் எல்லாம் மூடும்படியும், கடல் ஏழ் பொடி ஆம்படி=கடல்கள் ஏழும் பொடியாகும்படியும், ஓங்கிய=பேரொலி யுடன் வந்த, வெம் கரி தேர் பரி அசுரார்=கொடிய யானைகளும் தேர் களும் குதிரைகளும் அசுரர்களும், களம் மாண்டிட=போர்க் களத் தில் இறந்துபட, (அதனால்) நீண்ட அரவின் சிரம் மீள்பட - பெரிய ஆதிசேடனுடைய தலை பூபாரத்தினின்றும் மீட்சி பெற, குவடோ துகள் வான் பெற=மலைகளின் பொடிகள் விண்ணளவு உயர, வாங்கிய=செலுத்திய, வண் கதிர் வேலா=வளமும் ஒளியுமுடைய வேலாயுதரே! கமழ்மா இதழ் சடையார்=மணம் வீசும் அழகிய கொன்றை மலரைச் சூடிய சடையுடையவரும், அடியேன் துயர் தீர்ந்திட=அடியேனுடைய கவலைகள் தீரும் பொருட்டு, வெண்= வெண்மையானதும், தழல்=நெருப்பில் வெந்ததும், மா=பெருமை

வாய்ந்ததுமான, பொடி அருள்வோர்=திருநீற்றைத் தந்தவரும், அடல் மான்=வலிமையுடைய மானையும், துடி=உடுக்கையையும், தாங்கிய வண்கரர்=ஏந்திய ஈகையுடைய திருக்கரத்தினரும் ஆகிய சிவபெருமானுடைய, மாடு அருள் உமையாள்=பக்கத்தில் இருந்தருளும் உமையவளும், எமை ஈன்றவள்=எம்மைப் பெற்றவளும் ஆகிய பார்வதியம்மை, ஈன்று அருள்=பெற்றருளிய, மென் குரவோனே=அமைதி வாய்ந்த குருநாதரே! கடையேன்=கீழ் மகனாகிய என்னுடைய, இரு வினை=இரு வினைகளும், நோய்=பிறவி நோயும், மலம் மாண்டிட=மும்மலங்களும் அழியும்படி, தீண்டிய=பரிச தீட்சை செய்த, ஒண் சுக மோகினி=ஒளிபெற்ற சுகத்தைத் தரும் மோகினியான, வளிநாயகி=வள்ளி பிராட்டியின், பாங்கன் எனும் பகர்=கணவன் என்று சொல்லப்படுகின்ற, மின்கலை நூல் உடை முருகா=விளங்குகின்ற கலை நூல்களில் வல்ல முருகக் கடவுளே! அழல் ஓங்கிய=நெருப்புருவாய் ஓங்கி நின்ற, ஓங்கலின்=திருவண்ணாமலையில், வண் பெருமாளே=வளப்பம் பொருந்திய பெருமையிற் சிறந்தவரே! தமிழ் ஓதிய குயிலோ=தமிழ் போன்ற இனிய குரலையுடைய குயிலோ? மயில்=மயிலோ? ஆண்டலையாம்=கோழி தானோ? புறவம்=புறாவோ, கிளி=கிளியோ? காடையின்=காடையோ? அணிலோ=அன்றிலோ? அளியாம்=வண்டோ? என்னும்படி, குரல் வாய்ந்தது=புள்குரல் வாய்ந்து, அதி செம் தகும் ஆம் மிடறு ஒலியார்=மிகுந்த செம்மையும் தகுதியும் உடைய கண்டத்து ஒலியுடைய மாதர்களின், வாய் இதழ் ஆம்=வாயிதழானது, சுளை தேன் கனியின் சுவை சேரும்=பலாச்சுளை தேன் பழம் இவைகளின் சுவை சேர்ந்ததாம், தன பாரமும்=கொங்கைப் பாரம், மலை ஆம் என ஓங்கிட=மலைபோல் பருத்து ஓங்க, மா பொறி சிந்திட=அழகிய தேமல் அங்கும் இங்கும் சிதறிட, விழிவேல் கண் வேலோ? நுதல் நெற்றியானது, சிலை=வில்லோ? வான் பிறை=சிறந்த பிறையோ? மாந் துளிரின் சரிரம்=அவர்களின் உடல் மாந்துளிரோ? குழல் இருள் ஆம்=கூந்தல் இருளோ? நகை=பற்கள், ஓங்கிய வான் கதிரின் சுடர் பாய=சிறந்த வானில் உள்ள சூரியனது பாயும் ஒளியோ? குமிழ் நாசியின்=மூக்கு குமிழம் பூவோ? முகமோ மதி ஆம்=முகமானது சந்திரனோ? குளிர் சேம் கமலம்=குளிர்ந்த செந்தாமரையோ? சரி தோடு=பொருத்தமாயுள்ள தோடு விளங்கும், இணை செவி ஆடு உசலாம்=இரண்டு காதுகள் அசைகின்ற ஊஞ்சலோ? களம் பூ கமுகம்=கழுத்து அழகிய கமுகோ? கொடி நூல் இடை உடையார்=இடை கொடியோ? நூலோ? என்னுமாறு இந்த அங்கங்களையுடையவர்கள், அனமாம்=அன்னம் போல்பவர், ப்ரியர்=பிரியங் காட்டுபவர்: மாண்புரி மின் கொடி மாதர்=பெருமை வாய்ந்த மின்னல் கொடி போன்றவர்களாகிய பொது மாதர்களின்,

குணமோடு=குணத்தில் ஈடுபட்டு, அமளியின் ஆடினும்=படுக்கையில் அவர்களுடன் விளையாடினாலும், ஓங்கிய பூ கமலம்=விளங்குகின்ற அழகிய தாமரை போன்ற சரண் நூபுர குழல் ஓசையும்=தேவரீருடைய திருவடியின் சிலம்பின் இனிய ஓசையும், ஏந்திடும் ஆண்டலையின் கொடியோடு=நீர் ஏந்தியுள்ள கோழிக் கொடியையும், எழுத அரிது ஆம் வடிவு ஓங்கிய பாங்கையும்=எழுத வொண்ணாத ஒளி சிறந்த அழகையும், மன் தகையேனே=மிகுதியாக என் நினைவில் வருவதை அடியேன் தடுக்க மாட்டேன் (மறவாமல் நன்கு நினைப்பேன்)

## பொழிப்புரை

திமிதோதிமி திமிதோதிமி தாங்கண தீங்கண தொங் தகுதோதகு தகுதோதகு டாங்குட தீங்கடதொங் திகுடோடிமி டிமிடோடிமி டாங்குட டீங்தகம் என்று ஒலிக்கின்ற முரசின் ஓசை திசைகள் எல்லாம் மூடும்படியும், ஏழு கடல்களும் பொடியாகும்படியும், பேரொலியுடன் வந்த கொடிய யானைகளும், தேர்களும், குதிரைகளும், அசுரர்களும், போர்க்களத்தில் இறந்து படவும், அதனால் பெரிய ஆதிசேடனுடைய தலைச் சுமை குறையவும், மலைகள் பொடியாகி அத்துகள் விண்ணளவு உயரவும் செலுத்திய வளமும் ஒளியும் உடைய வேலாயுதரே! நறுமணம் வீசும் அழகிய கொன்றை மலரைச்சூடிய சடைமுடியினரும், நெருப்பில் வெந்த வெண் திருநீற்றை அடியேனுடைய துயர்தீர அருளிச்செய்தவரும், வலிமையுடைய மானையும் உடுக்கையையும் ஏந்திய வழங்குந் தன்மையுடைய கரத்தினரும் ஆகிய சிவபெருமானுடைய பக்கத்தில் இருந்தருளும் உமையாளும் எம்மை யீன்றவருமாகிய பார்வதிதேவி பெற்ற அமைதிவாய்ந்த குருநாதரே! கடையேனாகிய சிறியேனுடைய இருவினைகளும், பிறவி நோயும், மும்மலங்களும் அழிந்து போம்படி பரிசதீட்சை புரிந்தவரும் ஒளியுடைய சுகமோகினியுமாகிய வள்ளி நாயகிக்குக் கணவனாகச் சொல்லப்படுகின்ற கலை நூல்களில் வல்ல முருகவேளே! நெருப்புருவாய் ஓங்கி நின்ற திருவண்ணாமலையில் வளமையுடன் உறையும் பெருமிதமுடையவரே! பொது மாதர்களின் இனியகுரல் குயிலோ? மயிலோ? கோழியோ? புருவோ? கிளியோ? காடையோ? அன்றிலோ? வண்டோ? என்னும்படியும், வாயிதழ் பலாச் சுளையோ? தேனோ? பழமோ? என்னும்படியும், தனபாரம் மலை போல் வளர்ந்து நிற்கவும், அழகிய தேமல் சிதறவும், கண்கள் வேலோ? வில்லோ? என்னும்படியும், சரீரம் மாந்தளிரோ? கூந்தல் இருளோ? பற்கள் சிறந்த சூரிய ஒளியோ? மூக்கு குமிழம்பூவோ? முகம் சந்திரனோ? குளிர்ந்த செந்தாமரையோ? பொருந்திய இரு தோடுகள் விளங்கும் காதுகள் ஊஞ்சலோ? கழுத்து கமுகோ? இடை கொடியோ? நூலோ? என்னும் படி

காட்சிதரும் அன்னம் போன்றவர்களும், அன்பு காட்டுகின்றவர்களும், சிறந்த மின்னல்கொடி போன்றவர்களும் ஆகிய பொது மாதர்களின், குணத்தில் ஈடுபட்டு அவர்களுடன் படுக்கையில் விளையாடினாலும், தேவரீருடைய விளங்குந் தாமரை போன்ற திருவடியின் சிலம்போசையையும், உமது கரத்தில் ஏந்திய கோழிக் கொடியையும் எழுதவொண்ணாத வடிவழகையும் அடியேன் ஒரு சிறிதும் மறக்கமாட்டேன்.

## விரிவுரை

இத் திருப்புகழில் 3 அடிகள் விலைமகளிரது அவயவ நலன்களை வியந்து கூறுகின்றன.

**தமிழோதிய குயிலோ மயிலாண்டலை யாம்புறவம் கிளிகாடையி னணிலே ரளி யாங்குரல் வாய்ந்ததிசெங் தகுமாமிட றெலியார் :—**

தமிழ்—இனிமை பெண்களின் குரல் மிகவும் இனிமையாக பறவைகளின் குரல்போல் இருக்கும். குயில், மயில், கோழி, புரு, கிளி, காடை, அன்றில், வண்டு முதலிய பறவைகளை இங்கு கூறியுள்ளார். இதேபோல் வேறு திருப்புகழ்ப்பாடல்களிலும் கூறியுள்ளார்.

……"மயில் காடை
கோகில நற்புற வத்தொடு குக்குட
ஆரணியப்புள்வ கைக்குரல் கற்று"
—(கோமள) திருப்புகழ்.

……"அளிகாடை
மயில்குயி லன்றிலெனும்பு ளின்பல
குரல் செய்திருந்து" —(வரைவில்) திருப்புகழ்

……"பொருகாடை
குயில் புரு மயில் குக்கில் சுரும்பினம்
வனபதாயுத மொக்குமெ னும்படி
குரல் விடா" —(குவளை) திருப்புகழ்.

**குணமோடம ளியினுடினு மோங்கிய பூங்கமலம் சரணூபுர குரலோசையும் ஏந்திடும் ஆண்டலையின் கொடியோடெழு தரிதாம்வடி வோங்கிய பாங்கைமன் தகையேனே :—**

இந்தப் பாடலில் அருணகிரிநாதர் தமக்குள்ள முருகபக்தியின உறுதியை உரைக்கின்றார்.

"முருகா! பொது மாதர்களின் கலவியின்பத்தில் அழுந்தினாலும், உனது திருவடியின் சிலம்போசையையும், சேவற் கொடியையும், அழகிய வடிவையும் ஒரு சிறிதும் மறவேன்."

இதனல் அருணகிரிநாதர் இவ்வாறு மாதர் கலவி நலத்தில் முழுகினர் என்பதன்று.

உலகமயல் தன்னை மயக்காது என்கின்றார். இதே போல் வேறு இடங்களிலுங் கூறியிருக்கின்றார்.

''கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக் கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேல் மறவேன்'' —கந்தரலங்காரம்.

''பகடியிடுகினு மமளியி லவர்தரு மநுராகப்
பரவை படியினும் வசமழியினு முதல்
அருணை நகர்மிசை கருணையொ டருளிய
பரம ஒருவச னமுமிரு சரணமு மறவேனே''
—(மகரமெறி) திருப்புகழ்.

கமழ்மா விதழ் சடையார் :—

கமழ் மா இதழ், இதழி என்ற சொல் இதழ் என வந்தது. இதழி—கொன்றை. சிவபெருமானுக்கு உகந்த மலர் கொன்றை. நல்ல நறுமணம் வீசும் அழகிய மலர் கொன்றை.

அடியேன்துயர் தீர்ந்திடவெண் தழல்மா பொடி யருள்வோர் :—

அருணகிரிநாதர் ஒருமுறை அருணசலேசுரர் ஆலயம் சென்றபோது சிவபெருமான் அர்ச்சகர் வடிவில் வந்து விபூதிப் பிரசாதம் வழங்கி யருளினர்.

எரியில் இட்டவை யாவும் கருமையாகும் இயல்புடையவை. வெண்மையான துணியை நெருப்பில் இட்டால் கரியாகின்றது. ஆனல் கருமையான சாணத்தை நெருப்பிலிட்டால் அது வெண்மையாகின்றது அதுபோல் திருநீறிட்டார் உள்ளத்தின் கருமை நீங்கி சுத்தமாவார் என்பது புலனாகின்றது. ஆதலால் தழலில் வெந்தது, வெண்ணிறமானது திருநீறு. இது முத்தி தருவது. இத்திருநீற்றை சிவபெருமானே எழுந்தருளி அருணகிரியார்க்குத் தந்தருளினர் என்றார். அருணகிரியாருடைய பெருமை நம்மனோரால் அளக்கற்பாற்றோ ?

கடையேனிரு வினைநோய்மல மாண்டிட தீண்டியவொண் சுகமோகினி வளிநாயகி —

அருணகிரிநாதர் முன் வள்ளியம்மையார் தோன்றி திருக்கரத்தால் அருணகிரியாரைத் தொட்டு பரிச தீட்சை செய்து, அருணகிரியாருடைய இருவினை மும்மலம் பிறவி நோய் முதலியவைகளைக் களைந்து அருள் பாலித்தார்.

இத்திருப்புகழின் 7, 8 அடிகள் அருணகிரியாருடைய சரித்திரக் குறிப்புகளுடன் கூடியவை.

## கருத்துரை

அருணைமேவும் அண்ணலே ! மாதர் மயக்கிலும் உம்மை மறவேன்.

## திருப்புகழ்

தலையை மழித்துச் சிவந்த துணியை யரைக்குப் புனைந்து
சடையை வளர்த்துப் புரிந்து புலியாடை
சதிரொ டுவப்பப் புனைந்து விரகொ டுகற்கப் புகுந்து
தவமொரு சத்தத் தறிந்து திருநீறு

கலையை மிகுத்திட் டணிந்து கரண வலைக்குட் புகுந்து
கதறு நிலைக்கைக் கமர்ந்த எழிலோடே
கனக மியற்றித் திரிந்து துவளு மெனைச்சற் றறிந்து
கவலை யொழித்தற் கிரங்கி யருள்வாயே

அலைகட லிற்கொக் கரிந்து மருவரை யைப்பொட்
டெறிந்து
மமருல கத்திற் புகுந்து முயரானை
அருளொடு கைப்பற் றிவந்து மருண கிரிப்புக் கிருந்து
மறிவுள பத்தர்க் கிரங்கு மிளையோனே

மலையை வளைத்துப் பறந்து மருவு புரத்தைச் சிவந்து
வறிது நகைத்திட் டிருந்த சிவனார்தம்
மதலை புனத்திற் புகுந்து நரவடி வுற்றுத் திரிந்து
மறமயி லைச்சுற் றிவந்த பெருமாளே.

### பதவுரை

அலை கடலில்=அலை வீசுகின்ற கடலில், கொக்கு அரிந்தும்=மாமரத்தை அரிந்தும், அரு வரையை=அரிய கிரவுஞ்ச கிரியை, பொட்டு எறிந்தும்=தூளாகுமாறு செய்தும், அமர உலகத்தில் புகுந்தும்=தேவ லோகத்திற் சென்று, உயர் ஆனை=பெருமையால் உயர்ந்த தெய்வயானை யம்மையை, அருளொடு கைபற்றி வந்தும்=கருணையோடு கரம்பற்றி வந்தும், அருணகிரி புக்கு இருந்தும்=திருவண்ணமலையில் வந்து எழுந்தருளி யிருந்தும், அறிவு உள பத்தற்கு இரங்கும்=அறிவு நிறைந்த அன்பர்களால் அடியவர்க்கு இரங்கி யருள் புரிகின்ற, இளையோனே=இளம்பூரணரே! மலையை வளைத்து=மேருமலையை வில்லாக வளைத்து, பறந்து மருவு புரத்தை=பறக்கின்ற ஆற்றலுடைய திரிபுரங்கள் மீது, சிவந்து=கோபித்து, வறிது நகைத்திட்டு இருந்த=சிறிது சிரித்திருந்த, சிவனார்தம்=சிவபெருமானுடைய, மதலை=குழந்தையே! புனத்தில் புகுந்து=தினைப்புனத்தில்

சென்று, நர வடிவு உற்று திரிந்து=மனித வுருவங் கொண்டு திரிந்து, மற மயிலே சுற்றி வந்த=வேடர் மயிலாம் வள்ளி நாயகியை வளைத்துக் கவர்ந்த, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! தலையை மழித்து=தலையை மொட்டை யடித்தும், சிவந்த துணியை அரைக்கு புனைந்து=சிவந்த காவித் துணியை இடுப்பில் அணிந்தும், சடையை வளர்த்து=சடையாகத் தலைமயிரை வளர்த்துக் கொண்டும், புரிந்து புலி ஆடை=விருப்பத்துடன் புலித்தோல் ஆடையை, சதிரொடு உவப்பப் புனைந்து=பெருமையாக மகிழ்ந்து தரித்தும், விரகொடு கற்க புகுந்து சாமர்த்தியமாகக் கற்க ஆரம்பித்தும், தவம் ஒரு சத்தத்து அறிந்து=தவம் என்பதை அந்த சொல்லின் ஓசையால் மட்டும் அறிந்தும், திருநீறு=திருநீற்றை, கலையை மிகுத்திட்டு அணிந்து=உடம்பில் மிகுதியாகப் பூசியும், கரண வலைக்கு உள் புகுந்து=இந்திரிய வலைக்குள் அகப்பட்டும், கதறும் நிலைக்கைக்கு அமர்ந்த எழிலோடே=வேதனைப்படுகின்ற நிலைக்கு உண்டான அழகுடனே, கனகம் இயற்றி=பொன் செய்யும் முயற்சியில் ஈடுபட்டு, துவளும் எனை=சோர்வடைகின்ற அடியேனை, சற்று அறிந்து=சிறிது என் கவலையை நினைத்து, கவலை ஒழித்தற்கு இரங்கி அருள்வாயே= கவலையை யகற்றுமாறு அடியேன்மீது இரக்கங் கொண்டு அருள் புரிவீராக.

## பொழிப்புரை

அலைகள் வீசுகின்ற கடலில் சூரனாகிய மாமரத்தை அழித்தும், கிரவுஞ்ச மலையைத் தூளாக்கியும், தேவலோகத்திற் சென்று பெருமையால் உயர்ந்த தேவயானை யம்மையை கருணையோடு அவருடைய திருக் கரம்பற்றிக் கொண்டு வந்து, திருவண்ணாமலையில் எழுந்தருளியிருந்து, சிவ ஞானிகளாகிய அடியார்கட்கு இரங்கி யருள்புரிகின்ற இளம்பூரணரே! மேரு மலையை வில்லாக வளைத்து, பறந்து திரிகின்ற ஆற்றல் படைத்த திரிபுரங்கள் எரியுமாறு கோபித்துச் சிறிது புன்னகை புரிந்த சிவபெருமானுடைய இளம்பாலகரே! தினைப்புனத்திற் சென்று, மனிதவுருவுடன் உலாவி, வேடர்குல மயிலாம் வள்ளி நாயகியைக் கவர்ந்த பெருமிதமுடையவரே! தலையை மொட்டையடித்தும், காவித்துணி யுடுத்தும், சடை வளர்த்தும் புலித்தோலைப் பெருமையாக மகிழ்ந்து தரித்தும், சாமர்த்திய மாகக் கற்கத் தொடங்கியும், தவம் என்பதைச் சொல்லால் மட்டுந் தெரிந்தும், உடம்பில் திருநீற்றை நிரம்பப்பூசியும், இந்திரிய வலைக்குள் அகப்பட்டும், வேதனைப்பட்டு, அந்த அழகில் ரசவாதத்தால் பொன் செய்தும் சோர்வு அடையும் அடியேனைச் சிறிது தேவரீர் நினைத்து, என் கவலையை அகற்றி இரங்கி அருள்புரிவீராக.

## விரிவுரை

**தலையை மழித்து:—**

இத்திருப்புகழில் அருணகிரிநாதர் சீலமும் சிவபக்தியும் இல்லாத வெறும் வேடங்களைக் கண்டிக்கின்றார்.

தலையை மொட்டையடித்துக் கொள்ளுதல் ஒரு சடங்கு. அதுவே ஞானநெறியாகாது. சீலமில்லாத கோலம் பயன் தராது.

இதனைத் திருவள்ளுவரும், பின்வருமாறு கூறுகின்றார்.

**மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்**
**பழித்தது ஒழித்து விடின்.**

என்கின்றார்.

**சிவந்த துணியை யரைக்குப் புனைந்து:—**

துறவிகள் தரிப்பது காவித்துணி.

நமது உடம்பில் ஒரு விஷப்பூச்சி தீண்டிப் புண் வருமானால் செம்மண்ணை நீரில் குழைத்துப் போடுவார்கள். அதனால் அவ்விஷப் புண்ணாறும் சுவரோரங்களில் விஷப்பூச்சிகள் சேரா வண்ணம் செம்மண் கோடு போடுவார்கள். துறவிகள் சத்திரத்திலும் இடிந்த திண்ணைகளிலும் படுப்பதனால் விஷப் பூச்சிகளால் இடர் உண்டாகாதிருக்கச் செம்மண்ணில் நனைத்த உடையை உடுத்துவார்கள் உள்ளம் செம்மையடைந்த குறிப்பை கல்லாடை குறிக்கும்.

இத்தகைய பெருமை மிகுந்த கல்லாடையை மனத்துறவு பெறாது. வெறும் வேடம் மாத்திரம் காரணமாக உடுப்பது பொருளாகாது இதனை அருணகிரியார்,

**''காவி யுடுத்துந் தாழ்சடை வைத்துங்**
**காடுகள் புக்குந் தடுமாறி''**

என்று ஒரு திருப்புகழில் கண்டிக்கின்றார்.

**''நெஞ்சில் துறவார் துறந்தார் போல் வஞ்சித்து**
**வாழ்வாரில் வன்கணா ரில்''**

என்று திருவள்ளுவர் வன்மையாகக் கண்டிக்கின்றார்.

**சடையை வளர்த்துப் புரிந்து புலியாடை சதிரொடுவப்பப் புனைந்து:—**

நீளமாகச் சடை வளர்த்தும், புலித்தோலைப் பெருமிதமாக உடுத்தும் திரிவர்.

காடே திரிந்தென்ன காற்றைப் புசித்தென்ன கந்தைசுற்றி
ஓடே யெடுத்தென்ன உள்ளன்பிலாதவர் ஓங்கு விண்ணோர்
நாடே யிடை மருதீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்பம் மேவுவரே.

என்கின்றார் முற்றத்துறந்த முனிவர் பெருமான் பட்டினத்தார்.

விரகொடு கற்கப் புகுந்து :—

விரகு—சாமர்த்தியம், ஏதாவது வித்தைதனைச் சாமர்த்தியமாகக் கற்கத் தொடங்குவார்கள். நீர்மேல் படுப்பது பூமிக்குள் புதையுண்டிருப்பது. இப்படிச் சில வித்தைகள்.

தவமொரு சத்தத் தறிந்து:—

தவம் என்பதைப் பேர் மாத்திரத்தால் அறிந்திருப்பர். அதனை ஒரு சிறிதும் மேற்கொள்வதில்லை.

திருநீறு கலையை மிகுத்திட்டணிந்து:—

விபூதியை உடம்பில் மிகுதியாகப் பூசிக்கொண்டிருப்பர். அதன்மீது அன்பினால் புனைவதில்லை. கலை—உடம்பு.

நீற்றைப் புனைந்தென்ன ? நீராடப் போயென்ன ? நீ மனமே
மாற்றிப்பிறக்க வகையறிந்தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக்கிடக்கும் எழுகோடி மந்திரம் என்ன கண்டாய்
ஆற்றிற்கிடந்துந் துறையறியாமல் அலைகின்றையே.

—பட்டினத்தார்.

கரணவலைக்குட்புகுந்து:—

பொறிபுலன்களின் வலைப்பட்டு மயங்குவர்.

இந்திரிய வய மயங்கி இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே.

—திருவாசகம்.

கனகமியற்றித்திரிந்து:—

தாம்பிரத்தைத் தங்கமாக்கும் வித்தையாகிய ரசவாதஞ் செய்து வேதனைப்படுவர். இதற்காகக் காடுகளில் மூலிகை தேடி, முப்பூ தேடித் திரிவர் என்னே பேதைமை.

"இரதாதிகளால் நவலோகம்
இடவே கரியாம் இதிலேது ?" —(வரதா) திருப்புகழ்.

**துவளுமெனைச் சற்றறிந்து கவலை யொழித்தற் கிரங்கியருள்வாயே:—**

"இப்படிச் சோர்வுறுகின்ற அடியேனைச் சிறிது தேவரீர் சிந்தித்து என்கவலையை யகற்றி அருள்புரிதல் வேண்டும்" என்று அடிகளார் வேண்டுகின்றார்.

**அலைகடலிற் கொக்கரிந்து —**

கொக்கு—மாமரம். சூரபன்மன் கடல் நடுவிலே எஃகு மாமரமாக நின்றான். கிளைகளை அசைத்து அண்டங்களை நடுங்கவைத்தான். முருகப் பெருமாள் வேலாயுதத்தை யேவி மாமரத்தைப் பிளந்து அருளினார்.

"சூர்மா மடியத் தொடுவேலவனே" —கந்தரநுபூதி.

**அறிவுள பத்தர்கிரங்கு மிளையோனே:—**

சிவஞானமுடைய அன்பர்கட்கு முருகன் கருணைபுரிகின்றான். முதல் மூன்று அடிகளில் வெற்று வேடத்தைக் கண்டித்தார் இங்கு மெய்ஞ்ஞானத்தை வற்புறுத்துகின்றார். அன்பினால் அகங்குழையும் அறிஞர்க்கு ஐயன் அருள்பாலிக்கின்றான்.

**மலையை வளைத்து:—**

திரிபுராதிகள் மீது புறப்பட்டபோது, சிவபெருமான் மேருகிரியை வில்லாகக் கொண்டு வளைத்தருளினார்.

**பறந்து மருவு புரம்:—**

பொன் வெள்ளி இரும்பு மயமான மூன்று கோட்டைகளுடன் பறந்து வந்து உலகுக்குத் துயர் விளைவித்தார்கள் முப்புரத்தார்கள். சிவபெருமான் சிரித்தார். புரத்தை எரித்தார்.

**என்னசெயங்கொண்டார் இவர் என்றான் முப்புரத்தைச்**
**சொன்னமயமாய்ச் சமைத்த சோழீசர்—பின்னுஞ்**
**சிரித்துச் செயங்கொண்டார் சித்தசனைக் கண்ணால்**
**எரித்துச் செயங்கொண்டார் இவர்.**

## கருத்துரை

அருணைமேவும் ஆறுமுகத்தரசே! அடியேனுடைய கவலையை ஒழித்தருள்.

உ
முருகா

# கற்பு

---

## விசாலம்

விசாலம் என்றஅந்த மாதுக்குப் பேருக்கு ஏற்ப புத்தியில் விசாலம் கிடையாது.எதைப் பற்றியும் சந்தேகம். அவசரப் புத்தி யதிகம். அதனுல் அவளுக்கும் கணவனுக்கும் அடிக்கடி வாக்குவாதம் நிகழும். ஏதோ காரியமாகக் கணவன் தாமதமாக வந்தால் கணவன்மீது சந்தேகப்படுவாள். பாத்திரங்களைப் போட்டு உருட்டுவாள். தகரடின் தட்டியதுபோல் சத்தம் போடுவாள். கணவன் மானஸ்தன். அக்கம் பக்கம் சிரிக்குமே யென்று மௌனமாக இருந்துவிடுவான்.

ஒரு நாள் கோயிலில் விசேஷ பூஜை, பஜனை. விசாலத்தின் கணவன் கமலக்கண்ணன் கோயிலுக்குப் போயிருந்தான். பஜனையில் கலந்து கொண்டான். மெய் மறந்து பாடினுன். இரவு 11 மணியாயிற்று. -புளியோதரை, சுண்டல் பிரசாதங்கள் விநியோகஞ் செய்தார்கள். கமலக்கண்ணன் பிரசாதம் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்கு வந்தான்.

விசாலம் மனதில் கணவனைக் கறுவிக் கொண்டே யிருந்தாள். கணவனைக் கண்டவுடன் பத்ரகாளி போல் சீறி விழுந்தாள். கணவனைப் பார்த்து, "ஏன் சீக்கிரம் வந்துவிட்டாய். அவள் உன்னை இவ்வளவு சீக்கிரம் அனுப்பிவிட்டாளா? என் குடியைக் கெடுக்க இந்த வூரில் அநேக பாவிகள் இருக்கின்ருர்கள். அவர்கள் வீட்டில் எருக்குத்தான் முளைக்கும். அவங்களுக்குப் புற்றுநோய்தான் வரும்" என்று வசைமாரி பொழிந்தாள்.

கமலக்கண்ணன் "ஏண்டீ இப்படி எரிமலை மாதிரி எரிந்து விழுகின்ருய்? உனக்கென்ன மூளைக்கோளாரு? நான் சிவனே என்று கோயிலுக்குப் போய் வந்திருக்கின்றேன். இன்று நம்ம பண்ணையாருடைய அபிஷேகக் கட்டளை. பஜனை நடந்தது. பஜனை பாடிவிட்டு வந்தேன். வீண் கற்பனை செய்து பற்பல வசை கூறிப் பாபத்தைத் தேடிக் கொள்ளுகின்ருய்" என்ருன்.

விசாலம் "நீ புளுகுவதற்கு அஞ்சமாட்டாய். நிஜமாகப் புளுகுகின்ருய். இதோ பார் உன் துணிகளில் கறைகள். என்னை ஏமாற்ற முடியுமா? நீ என்னை இரும்பாக நினைத்து மற்ற தோஷிகளைப் பொன்ளுக மதித்துத் திரிகின்ருய். என் தலைவிதி என்னை உனக்குப் பெண்டாட்டியாகச் செய்தது" என்ருள்.

கமலக்கண்ணன் "அடி பாவி! கோயிலில் புளியோதரை கொடுத்தார்கள். அந்த எண்ணெய்க் கறை இது. இதற்கு இத்தனைப் பாடு படுத்துகின்றாய். ஆத்திரக்காரிக்கு அறிவு மட்டு என்ற பழமொழிப் படியிருக்கின்றது. என்ன செய்வது? நான் செய்த பாவம், உனக்கு இந்தப் புத்தி வந்துளது. உன்னுடன் பேசிப் பயன் இல்லை. பேயை வேப்பிலை யடித்து ஓட்டிவிடலாம். சந்தேகப் பேயை யாரால் ஓட்ட முடியும்? கடவுள் கொடுத்த நேரம் உன்னால் வீணாகின்றது" என்று கூறிவிட்டுப் போய் படுத்தான். விசாலம் ஏதேதோ நெடுநேரம் பேசிக்கொண்டே யிருந்தாள்.

இப்படியாக அவர்களுக்குள் போர்மூளும்; ஓயும். விசாலத்துக்குக் குழந்தை பிறக்கவில்லை. அந்த வூரில் உள்ள கோயில்களுக்கெல்லாம் போய் சுவாமி கும்பிடுவாள். "தெய்வமே! எனக்கு ஒரு குழந்தையைக் கொடு. கேட்ட வரந்தரும் கிருபாநிதியே! "அம்மா! அம்மா!" என்று ஒரு புதல்வன் கூப்பிடுகின்ற குரல் என் காதில் விழவேண்டும். நான் மலடியாக இருக்கின்றேனே. உன் கோயிலில் ஆயிரம் நெய் விளக்கு ஏத்தி வைப்பேன். என்மீது கருணை செய். கருணாகரா!" என்று கண்ணீர் சிந்தி வேண்டிக் கொள்ளுவாள்.

ஒரு நாள் அவள் வீட்டில் சிறு கீரிப்பிள்ளையின் குட்டி வந்தது. விசாலம் பிள்ளையில்லாத வீட்டுக்குக் கீரிப்பிள்ளை வந்ததே. இதுவே நல்ல அறிகுறி என்று கருதி ஒரு கிண்ணத்தில் சீனி கலந்த பாலை அதன் முன் வைத்தாள். அது பிரியமாகக் குடித்தது. அது முதல் அக் கீரிப்பிள்ளை அடிக்கடி வரும். அவள் அன்பாக வைக்கும் பாலைக் குடிக்கும். நாள் சிறிது சென்றதும், கீரிப்பிள்ளை அங்கேயே தங்கி விட்டது.

விசாலம் அதற்கு ராமன் என்று பேரிட்டாள். "ராமா! ராமா!" என்று அன்பொழுக அழைப்பாள். கீரிப்பிள்ளை குழைந்து குழைந்து அவள் காலுக்கு அருகில் வளைந்து வளைந்து சுற்றி உலாவும். அவளுடன் கொஞ்சிக் குலாவும். விசாலத்துக்குக் கீரியிடம் அளவு கடந்த அன்பு. அதை முகத்துடன் முகம் வைத்து," என் அன்பே! கண்ணே! கட்டிக் கரும்பே!" என்று கொஞ்சுவாள். அதற்கு இனிய பண்டங்களைக் கொடுத்து உதவுவாள். அது உண்பதைக் கண்டு உவகை கொள்ளுவாள். கீரிப்பிள்ளை அவர்கள் வீட்டுக்கு வந்தது முதல் கணவனுடன் சண்டை போடுவது நின்றுவிட்டது.

கீரிப்பிள்ளை வந்த அதிர்ஷ்டம் விசாலம் கருக்கொண்டாள். அவளுக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி. பெரிய சாம்ராஜ்யமே கிடைத்தது போல் நினைந்து உள்ளம் உவந்தாள். தெய்வத் திருவருளைக் கருதி உருகினாள். கருவுற்ற நாள் தொட்டுக் கணவனை அன்புடன் உபசரித்தாள். எரிமலை சந்தனமலையானது போல் அவள் மாறிவிட்டாள்.

"தெய்வமே! எனக்கு அருள் புரிந்த எந்தையே! ஆண் குழந்தை பிறக்க அருள் செய்" என்று வேண்டிக் கொண்டாள். தெய்வத் திருவருளால் பத்தாவது மாதத்தில் சந்திரனைப்போல் ஓராண் மைந்தன் பிறந்தான். அப்போது 'ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும்!' என்ற திருவள்ளுவரின் வாக்குப்படி விசாலம் பேரானந்தம் அடைந்தாள். ஒன்பதாம் நாள், மகனுக்குத் திருமஞ்சள் நீராட்டி. தொட்டிலிட்டுத் தாலாட்டினுள்; சீராட்டினுள்; பாராட்டினுள்.

மாதவத்தால் வந்துதித்த மாணிக்க மணிவிளக்கே!
ஆதவனைப்போல் விளங்கும் ஆரமுதே தாலேலோ.
தேனே! அமுதமே! செல்வத் திருமகனே!
கோனே எமது குலமணியே தாலேலோ

கிரிப்பிள்ளைக்கு ராமன் என்று பேரிட்டிருப்பதனுல் பிறந்த மகனுக்கு லட்சுமணன் என்று பேர் சூட்டினுள்.

இராமன் தன் வீட்டுக்கு வந்த அதிர்ஷ்டத்தாலேயே தனக்கு லட்சுமணன் பிறந்தான் என்ற நம்பிக்கை கொண்ட அவள் இராமனுகிய கிரிப்பிள்ளையிடம் முன்னைவிடப் பன்மடங்கு அன்பு கொண்டு, அதனைப் பாலும் பழமுந் தந்து பரிந்து ஊட்டி வளர்த்தாள்.

கமலக்கண்ணன் குழந்தையின் குளிர்முகத்தைக் கண்டு மழையைக் கண்ட சகோரப் பறவைபோல் பெரிதும் மகிழ்ச்சி யடைந்தான்.

விசாலம் குழந்தையின் சிறிய முடியை இரட்டையாகப் பின்னி, ரிப்பன் வைத்து, பூ முடித்து, நெற்றியில் சாந்துப் பொட்டு வைத்து, கன்னத்தில் திருஷ்டி பொட்டு வைத்து, முகத்தோடு முகஞ்சேர்த்துக் கொஞ்சுவாள். "ராமா! உன் தம்பியைப் பார். "தம்பியுடையான் படைக்கஞ்சான்" என்பதுபோல் உன் தம்பி உனக்கு நன்மை செய்வான். ராமா! நீ வந்த புண்ணியந்தான் உன் தம்பி பிறந்தான். நீ நிரம்ப பாக்கியசாலி. உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகின்றேன். நீடுழி வாழி" என்று கூறி அதனைப் பாராட்டினுள்.

தன் மகனைக் கண்ணை இமை காப்பதுபோல் காப்பாற்றினுள். வறுமையாளனுக்குக் கிடைத்த பொன் புதையலைப்போல் அவளுக்கு புத்திரப்பேறு கிடைத்தது. குழந்தையைக் கையில் ஏந்தி. "என் ராஜாவே! என் செல்வமே! என் முத்துமணியே! இதோ பார். உன் அண்ணன். இவனுல் நீ எனக்குப் பிறந்தாய். உன் அண்ணன் உன்னைப் பார்த்துப் பார்த்து சந்தோஷப் படுகின்றுன். இவன்தான் உனக்கு அண்ணன். அண்ணுவை நம்பு. அண்ணு உனக்கு எல்லாஞ்செய்வான். அண்ணனைப்போல ஒரு உத்தமனைப் பார்க்க முடியாது. உன் அன்பு அண்ணு இவன்" என்று மொழி தெரியாத குழந்தையிடங் கூறுவாள்.

அன்பு அளவுக்குமேல் போனுல் அறிவு அங்கு தொழிற்படாது. ஆதலால் சின்னஞ்சிறு சிசுவினிடம் இவ்வாறு பேசி மகிழ்வாள்.

லட்சுமணனுக்கு ஆறு மாதம் பிறந்தது. அன்னப் பிராசனஞ் செய்தாள். கோயிலுக்குக் கொண்டு போய் ஆண்டவனுக்கு அபிஷேகஞ் செய்வித்தாள். ஆராதனை செய்வித்தாள். தெய்வத்துக்கு நிவேதனஞ் செய்த அன்னத்தை மகனுக்கு ஊட்டினுள். அன்று தன் நண்பர்கட்கும், உறவினர்கட்கும் தடபுடலாக விருந்து வைத்தாள். எல்லாரும் வயிறு புடைக்க உண்டு குழந்தையை வாழ்த்திவிட்டுப் போனுர்கள்.

விசாலத்தின் தோட்டத்திற்குச் சிறிது தூரத்தில் ஒருநல்ல பாம்பு வசித்தது. ஒருநாள்கீரிப்பிள்ளை அதனுடன் போரிட்டு அதனைக் கொன்றது. அதுஓடி வந்து தன் தாயாரிடம் வாலை யசைத்து, முகத்தை யசைத்தது. விசாலம் அதன் பின் சென்றுள். பாம்பு இறந்து கிடந்த இடத்துக்குக் கீரிப்பிள்ளை அழைத்துச் சென்றது. மகன் ராமன் பாம்பைக் கொன்றது என்று அறிந்து மகிழ்ந்தாள்.

பாம்பு இறந்த இடத்தில் பளிச்சென்று ஒன்று மின்னியது. விசாலம் அந்த இடத்தைக் கிளறிப் பார்த்தாள். ஒரு பொற்புதையல் இருந்தது. அந்தப் புதையலைத்தான் அந்த நல்ல பாம்பு காவல் புரிந்து கொண்டிருந்தது. புதையலை எடுத்துக் கொண்டு வந்து வீட்டில் சேர்த்தாள். தன் கணவனை யழைத்துக் காட்டி ராமன் செய்த தீரச் செயலைக் கூறினுள். எல்லாம் தங்கக் காசுகள். பளபள என்று மின்னியது. மூவாயிரம் காசுகள் இருந்தன. வெளியே தெரியக் கூடாது என்று அதனை மிகமிகப் பத்திரப்படுத்தி வைத்தாள். லட்சுமணனுக்குப் பொன் நகைகளைப் பூட்டி யலங்கரித்தாள்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின் ராமனுக்கு அந்த வீட்டில் அதிக செல்வாக்கு ஏற்பட்டது. ராமனுக்கு மிகுந்த உபசாரம்.

அன்று தைப்பூசம். பூசத் திருநாள் உலகமெல்லாம் கொண்டாடுகின்ற நன்னுள். பூசத்தன்றுதான் இறைவன் பதஞ்சலிக்கும் வியாக்கிரபாதருக்குமாக கனகசபையிலே திருநடனம் புரிந்த நாள். ஆதலால் அன்று காலை தன் மகன் லட்சுமணனை நீராட்டிப் பொட்டிட்டுப் பூச்சூட்டி தொட்டிலில் தூங்க வைத்தாள். விசாலம் செப்புக் குடத்தை யெடுத்துக் கொண்டு நதிக்குப் புறப்பட்டாள். “ராமா! நான் ஆற்றுக்குப் போகின்றேன். தம்பி தொட்டிலில் தூங்குகின்றுன். நான் வரும் வரை தம்பியைப் பார்த்துக் கொள்” என்று கூறிவிட்டுப் புறப்பட்டாள்.

கீரிப்பிள்ளை லட்சுமணன் தூங்கும்போது இங்கும் அங்குமாக உலாவிக் கொண்டிருந்தது. ஒரு நல்ல பாம்பு தொட்டிலின் கயிறு

வழியாகக் குழந்தையைக் கடிக்க வந்தது. கீரிப்பிள்ளை ஒரு பாய்ச்சலாகப் பாய்ந்து, பாம்பைத் துண்டு துண்டாகக் கடித்தெறிந்தது. கீரிப்பிள்ளை தான் செய்த உதவியையும், அந்த வீர வெற்றிச் செயலையும் தன் அன்னையாகிய விசாலத்துக்கு அறிவிக்க வேண்டும் என்ற உணர்ச்சியால் உந்தப்பெற்று ஓடிச் சென்றது.

விசாலம் நதியில் நீராடிவிட்டு, குடத்தில் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்து கொண்டிருந்தாள். கீரிப்பிள்ளை எதிரே வரக் கண்டாள். அதன் வாயில் ரத்தக்கறையையும் பார்த்தாள். எதையுமே ஆராயாமல் அவசரப்பட்டு முடிவு கட்டுகின்ற சுபாவமும், ஆத்திர புத்தியும் உடைய அவள், தன் மகனைக் கடித்துவிட்டு அது வருவதாகக் கற்பனை செய்து கொண்டாள். "பாழுங் கீரியே! என் அருந்தவப் புதல்வனைக் கடித்துவிட்டு வருகின்றுயா?" என்று சீறினுள். அரக்கியாக மாறினுள். சிந்தனையையும் பொறுமையையும் இழந்த அவள் இரக்கமின்றி, தண்ணீர்க் குடத்தைக் கீரிப்பிள்ளை மேல்போட்டாள். குற்றம் புரியாத குணமுடைய கீரிப்பிள்ளை சுருண்டு விழுந்து மாண்டது.

விசாலம் ஓவென்று கதறி யழுது கொண்டு வீட்டிற்கு விரைந்து ஓடிப் போனுள்.

குழந்தை சுகமே தொட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தது. அதன் அருகில் அரவம் துண்டு துண்டாக மாண்டு கிடப்பதைக் கண்டாள். "ஐயோ! என் அறிவுள்ள ராமன் இந்தப் பாம்பை யல்லவா கொன்றுன். என் மகனைக் கடிக்க வந்த இந்தப் பாம்பைக் கொன்று, இந்த நற்செய்தியை எனக்கு அறிவிக்க ஓடி வந்தான் போலும். ஐயோ! ஆத்திரக்காரியாகிய நான் உண்மையை யுணராமல், என் வளர்ப்புப் புதல்வனுகிய ராமனைக் கொன்றுவிட்டேனே. ஈடு செய்ய முடியாத இந்த நஷ்டத்தை யடைந்தேன். பாவிக்கு நல்ல கதி கிட்டுமா?" என்று புலம்பி யழுதாள். அழுது என்ன பயன்? மாண்ட கீரி மீண்டு எழுமா? தன் வாழ்நாள் முழுவதும் கீரியை நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்தாள்.

ஆதலால் ஆத்திரப்பட்டு எதையும் செய்யக் கூடாது. வாழ்வில் நிதானம் வேண்டும்.

உ
முருகா

# ஆறுபடை வீடுகள்

ஆறு என்ற எண்ணிக்கை உயர்ந்தது. ஒரு பெட்டி செய்ய வேண்டுமாயின் ஆறு பலகைகள் வேண்டும். கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, மேல், கீழ் என்று திசைகள் ஆறு ஆகும். இந்த ஆறு திசைகளிலும் பார்வையுடன் ஆறு முகங் களை யுடையவன் முருகன்.

(1) சமயங்கள் ஆறு :

சைவம், வைணவம், காணுபத்தியம், கௌமாரம், சௌரம், சாத்தம் என்பன.

(2) அத்துவாக்கள் ஆறு :

மந்திரம், வன்னம், பதம், தத்துவம், புவனம், கலை என்பன.

(3) ஆதாரங்கள் ஆறு :

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம் விசுத்தி, ஆக்ஞை என்பன.

(4) அரசாங்கம் ஆறு :

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்பன.

படை குடி கூழமைச்சு நட்பரணாறும்
உடையான் அரசருள் ஏறு. —திருக்குறள்

(5) அந்தணர் தொழில் ஆறு :

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஏற்றல், ஈதல் என்பன.

(6) அகச்சமயம் ஆறு :

சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம்.

(7) அகப்பாட்டுச் சமயம் ஆறு :

பாடாணவாத சைவம்; சங்கிராந்தவாத சைவம், பேதவாத சைவம்; பேத சைவம், சுத்த சைவம்; அவிகாரவாத சைவம்.

(8) இனம் ஆறு :

வல்லினம் 6, மெல்லினம் 6, இடையினம் 6.

(9) இறைவனுடைய குணங்கள் ஆறு :

சர்வஞ்ஞிதை, திருப்தி, அநாதிபோதம், அலுப்த சக்தி, அநந்த சக்தி, சுவதந்திரத்வம்.

"ஏவர்தம்பாலுமின்றி எல்லைதீ ரமலற் குள்ள
மூவிருகுணனும்" —கந்தபுராணம்

(10) ஐசுவர்யம், வீர்யம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்பனவுமாம்.

(11) சக்திகள் ஆறு :

பராசக்தி, ஆதிசக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி, இச்சா சக்தி, குடிலா சக்தி.

(12) வேத அங்கங்கள் ஆறு :

சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பம்.

(13) சம்பத்திகள் ஆறு :

சமம், தமம், உபரதி, திதீட்சை, சிரத்தை, சமாதானம்.

(14) அறிவு ஆறு :

சுவை யறிவு; உறு அறிவு, ஒளி யறிவு, ஓசை யறிவு, கந்த அறிவு, பகுத்தறிவு.

(15) இரசங்கள் ஆறு :

இனிப்பு, கசப்பு, புளிப்பு, உறைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன

(16) இருதுக்கள் ஆறு :

வசந்தருது, கிரீஷ்மருது, வர்ஷருது, சரத்ருது, ஏமந்தருது, சிசிரருது.

(17) பருவங்கள் ஆறு :

கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில்.

(18) சக்கரவர்த்திகள் அறுவர் :

அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுற்சன், புரூரவன், கார்த்தவீரியன்.

(19) சாஸ்திரங்கள் ஆறு :

வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூருவ மீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை என்பன.

(20) பகை—ஆறு :

காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன.

இவ்வாறு ஆறு என்ற எண்ணிக்கையில் சிறந்தவைகள் பலவுள. அத்தனையும் கூறில் விரியும்.

ஆறுதலையுடைய அண்ணல் ஆறுபடை வீடுகளில் அமர்ந்து ஆன்மாக்களுக்கு அருள்புரிகின்றான்.

ஆறு ஆதாரங்களே அட்பரமனுடைய ஆறுபடை வீடுகளாம். திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன் குடி, திருவேரகம். குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்பன.

உல்லாசம்—திருப்பரங்குன்றம்.
நிராகுலம்— திருச்செந்தூர்.
யோகம்—பழநி.
இதம்—சுவாமிமலை.
சல்லாபம்—திருத்தணி.
விநோதம்—பழமுதிர் சோலை.

இத்தகு வித்தகத் திறத்தை அருணகிரிநாதர் கந்தரநுபூதியில் விளக்குகின்றார்.

''உல்லாச நிராகுல யோக வித
சல்லாப விநோதனும் நீயலையோ''

இந்த ஆறுபடை வீடுகளையும் அடியார்கள் அன்புடன் வழிபட்டு ஆறெழுத்தாகிய சடக்கர மந்திரத்தைச் செபித்தால், அவர்கள் திருவுள்ளக் கோயிலில் முருகன் எழுந்தருளியிருப்பான்.

''ஆறுதிருப்பதிகண் டாறெழுத்தை அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே''

என்று கந்தர் கலிவெண்பாவில் குமரகுருபர சுவாமிகள் கூறியருளினார்.

புண்ணியம் எண்ணில்லாத வகையில் செய்தவர்க்கே இந்த ஆறுபடை வீட்டுத் தரிசனம் ஒருங்கே கிடைக்கும்

ஆறு கார்த்திகைப் பெண்கள் மகிழ ஆறு திருமேனி கொண்டு அழுது விளையாடி யருளியவரும், பராசர குமாரர்களான தப்தர், அநந்தர், நந்தி, சக்ரபாணி, சதுர்முகர், மாலி என்ற அறுவருக்கும் உபதேசித்தவரும், ஆறுகாலங்களிலும் வழிபடத் தக்கவரும், ஞானப் பிரகாசம், ஞானனந்தப் பிரகாசம், சர்வஞான வியாபகப் பிரகாசம், சுத்த ஞான சாக்ஷிப் பிரகாசம், சர்வ பரிசுத்த பிரம ஞானனந்த அருட்பிரகாசம், அநாதி நித்ய பிரம ஞானனந்த சிவப்பிரகாசம் என்று ஆறு பிரகாச ஆறுமுகப் பரம்பொருளுமாகிய முருகப் பெருமானுடைய ஆறுபடை வீடுகளை பக்திபரவசத்துடன் தரிசிப்போர், இம்மை மறுமை முத்தி என்று மும்மை நலங்களையும் எளிதிற் பெறுவார்கள்.

# மகாபாரதம்

## சாந்தி பருவம்

## மோக்ஷ தருமம்

(192–ஆம் பக்கத் தொடர்ச்சி)

### நாராயணரும் நாரதரும்

யுதிஷ்டிரர் "பிதாமகரே! எந்தத் தேவதையை வணங்கினுல் எளிதில் சித்தி பெறுகின்ருன்! அதனைக் கூறும்" என்று கேட்டார்.

பீஷ்மர் "தருமநந்தன! முன் ஒரு காலத்தில் சுவாயம்புவமன்வந்தரத்திலே கிருதயுகத்திலே நாராயணர் தர்மர் என்பவருக்குப் புத்திரராகப் பிறந்தார். நரர், நாராயணர், ஹரி, கிருஷ்ணர் என்ற நான்கு மூர்த்திகளாக விளங்கினுர்கள். நரநாராயணர்கள் என்ற இருவர்கள் பதரிகாச்ரமத்தில் வெகுகாலம் தவஞ் செய்தார்கள். மிகச் சிறந்தவரான நாரத முனிவர் அங்கு சென்ருர்; நரநாராயணர்களை வணங்கினுர். நீங்கள் உலகங்கட்கெல்லாம் மூலமானவர்கள். உங்களை எல்லோரும் வழிபடுகின்ருர்கள். அப்படியிருக்க நீங்கள் யாரை வேண்டித் தவஞ் செய்கின்றீர்கள். எனக்கு இது ஆச்சர்யமாக இருக்கிறது. எனக்கு அருள்புரிந்து கூறுவீராக" என்று வினுவினுர்.

நாராயணர் "நாரதரே! உமக்கு நல்வரவு: உண்மையானதும் உரையுணர்வுக்கு எட்டாததுமான பரம் பொருளை நாங்கள் ஆராதிக்கின்ருேம். அந்தப் பரம்பொருள்தான் எங்களுக்கும் அகில உலகங்கட்குங் காரணமானது. அந்த பரம்பொருளிலிருந்தே எல்லா உலகங்களும் தோன்றின. அவரை அனைவரும் பூசிக்கவேண்டும்" என்ருர்.

நாரதர் நரநாராயணர்களை வணங்கிவிட்டு, விண் வழியே, மேருமலையில் சென்று அங்கிருந்து பாற்கடலின் வடதிசையிலுள்ள சுவேதத்வீபத்தை யடைந்தார். அங்கு இந்திரியங்கள் இல்லாதவர்களும் ஆகாரம் இல்லாதவர்களும், சலனம் இல்லாதவர்களும், நறுமணம் உள்ளவர்களும், வெண்ணிறமுடையவர்களும், பாவமேயில்லாதவர்களும், வஜ்ரசரீரம் படைத்தவர்களும், கண்களைக்கவரும் பேரழகு படைத்தவர்களும், நான்கு கைகளுடையவர்களும், சூரியனைப்போன்ற ஒளியுடையவர்களும், பரமபக்தர்களுமான உத்தமர்களை நாரதர் கண்டு களித்தார். அவர்களை அன்புடன் அஞ்சலி செய்தார்.

நாரதர் ஒருகாலில் நின்று திருமாலை வேண்டித் தவஞ் செய்தார். விஷ்ணுவை ஆயிரம் நாமங்களால் துதி செய்தார். அப்போது

ஆயிரம் சிரங்களையுடையவரும், ஆயிரம் பாதங்கள் உள்ளவரும். ஆயிரங் கரங்களை யுடையவருமான திருமால் அவருக்குக் காட்சி யளித்தார்.

நாரதர் திருமாலைப் பலமுறை பணிந்தார். திருமால் "அன்பனே! உனக்கு நலம் விளைவதாக. ஏகதர், த்விதர், த்ரிதர் என்ற மகா முனிவர்களும் என்னைக்காணும் பொருட்டு இங்கு வந்தார்கள். அவர்கட்கும் நான் காட்சிதரவில்லை. இங்கிருக்கின்ற வர்கள் ஏகாந்திகளாக இருந்து என்னை அடைந்தவர்கள். இவர்கள் உத்தமர்கள். இதோ என் திருமேனியில் எல்லா உலகங்களும் அடங்கியிருப்பதைப்பார். உலகங்களைக் காக்கும்பொருட்டு நான் பத்து அவதாரங்களை மேற்கொள்ளுகின்றேன். என் மகிமையை யாராலும் அறிய முடியாது. என்னிடமிருந்து பிரமதேவர் தோன்றி னர். பிரமாவிடமிருந்து நீலலோகிதர் என்ற உருத்திரர் தோன்றி னர். உனக்கு தவப்பயன் விளையும்" என்று கூறி மறைந்தருளினர்.

## உபரிசரவசுவின் கதை

தருமர் "பிதாமகரே! உபரிசரவசுவின் வரலாற்றை அறிய விரும்புகின்றேன்" என்றார். பீஷ்மர், "உபரிசரன் என்ற அரசன்முன் உலகத்துக்குத் தலைவனாக இருந்தான். அவன் இந்திரனுக்கு நண்பன். விண்ணில் விமானத்தில் உலாவுவான். அதனால் உபரிசரன் என்ற பேர் பெற்றான். தரும சீலன்; விஷ்ணு பக்தன். அந்த உபரிசர வஸு பிருகஸ்பதியைக் கொண்டு யாகங்களைச் செய்தான்.

இந்திரன் பூமண்டலத்தையடைந்து ஒரு சிறந்த யாகத்தைச் செய்தான். பிருகஸ்பதி மாவினால் பசுவைச் செய்து ஆகுதி கொடுக் கத் தொடங்கினர். தேவர்கள் அதை மறுத்து வெள்ளாட்டைப் பலியிடுமாறு கூறினர்கள்.

அப்போது முனிவர்கள், "அஜம் என்றால் முளைக்காத நெல் என்பது பொருள். பழமையான நெல் முளைக்காது. ஆதலால் நெல் முதலியவற்றால்தான் யாகஞ் செய்யவேண்டும். உயிர்க்கொலை கூடாது" என்றார்கள். அப்போது அங்கு உபரிசரன் வந்தான். அவன் எல்லாம் அறிந்தவன்.

அவனை தேவர்களும் அந்தணர்களும் "அஜத்தினலா? தானியங்க ளினலா? எதனல் யாகம் புரியவேண்டும்" என்று கேட்டார்கள். முனிவர்கள் "மாவினல் செய்யவேண்டும்" என்றும், தேவர்கள் "ஆட்டினல் செய்யவேண்டும்" என்றும் வாதிட்டார்கள். உபரி சரன் என்ற அரசன் தேவர்களின் மனம் மகிழவேண்டும் என்று கருதி சாகம் என்ற ஆட்டினல் செய்யவேண்டும்" என்றான். அந்தணர்கள் அவனைச் சீறி நீ கீழே விழக்கடவது" என்று சபித்

தார்கள். பூமி பிளந்தது. வசு நில வெடிப்பில் விழுந்தான். பிறகு அவன் திருமாலை ஆராதித்து, திருமாலின் திருவருளால் சாபந்தீர்ந்து நற்கதி பெற்ருன். திருமால் கருட பகவானைக்கொண்டு அவனை மேலே தூக்கிக் கருணைபுரிந்தார்.

## ஒரு அந்தணனுடைய வரலாறு

யுதிஷ்டிரர், பாரதரே! எனக்குத் தாங்கள் மோட்ச தருமத்தை நன்கு உபகரித்திர்கள். பிரம்மசாரி முதலிய ஆச்ரமிகளுக்குரிய சிறந்த தருமத்தை எனக்குச் சொல்லும்'' என்று கேட்டார்.

பீஷ்மர் ''அரசனே! ஆச்ரமங்களில் விதிக்கப்பட்ட தருமம் எல்லாம் சிறந்ததுதான். முன்ஞெரு சமயம் எங்கும் வாயுவைப் போல் உலாவுகின்ற நாரதர் இந்திரவுலகஞ் சென்ருர். இந்திரன் அவரை வணங்கி ''பிரம்மபுத்திரரே! நீர் மூன்று உலகங்களிலும் உலாவுகின்றீர். நீர் கண்டவைகளில் ஆச்சர்யமானது எது? எனக்குச் சொல்லும்'' என்று கேட்டான். அப்போது நாரதர் தேவர் கோமானுக்குக் கூறியதைக் கூறுகின்றேன். கேள்.

கங்காநதியின் தென்கரையில் மகாபத்மம் என்ற சிறந்த நகரில் ஒரு அந்தணர் வாழ்ந்து வந்தார். அவர் அத்ரி முனிவர் மரபில் பிறந்தவர். நல்ல நியமங்களையுடையவர். சினம் இல்லாதவர்; உண்மையை யுரைப்பவர்; தவசீலர்; வேதவிற்பன்னர், மக்கள், பேரக் குழந்தைகள், சம்பந்திகள் சுற்றத்தார்கள் சூழ அமைதியுடனும் திருப்தியுடனும் வாழ்ந்தார். அவர் மனதில் ,''எந்தச் செயலைச் செய்தால் சுகம் கிடைக்கும் என்று ஆராய்ந்தார். அவருக்கு இதில் நிச்சயம் ஏற்படவில்லை.

ஒருநாள் சிறந்த ஒழுக்கமுள்ள உத்தமமான பிராம்மண அதிதி அங்கு வந்தார் அவரை இவர் நன்கு வரவேற்று, இருக்கச் செய்து விசிறியால் வீசி, நல்லுணவு நல்கி உபசரித்தார், அந்தண்மையுடைய பெரியவரே! எனக்கு எல்லா நலன்களும் அமைந்திருக்கின்றன. எனக்கு முத்திநலம் சித்திக்கவேண்டும். எது எளிய வழி? எது சிறந்த அறநெறி?'' இதனை எனக்கு நீர் கூறவேண்டும்'' என்று கேட்டார்.

அதிதி, ''அன்பரே! சிலர் யாகத்தைப் புகழ்கின்ருர்கள்; சிலர் இல்லறத்தைப் பெரிய அறம் என்கின்ருர்கள்; சிலர் துறவறத்தைச் சிறந்தது என்கின்ருர்கள்; சிலர் குருபக்தியே உயர்ந்தது என்கின்ருர்கள். சிலர் வேதம் ஓதுதலைப் புகழ்கின்ருர்கள். எது சிறந்தது என்று எனக்கும் உறுதியாகத் தெரியவில்லை.

இதனையறிய ஒரு உபாயத்தைக் கூறுகின்றேன். கேளும்.

கோமதிநதி தீரத்தில் நைமிசம் என்கின்ற வனத்தில் நாகச்சுனை ஒன்றுளது. அங்கு தேவர்களும் அரசர்களும் யாகங்களைச் செய்து நன்மை யடைந்தார்கள். அந்த இடத்தில் மகாபத்மன் என்ற ஒரு மகாநாகன் வாழ்கின்றான். அவன் எல்லாம் அறிந்தவன்; அறப் பெருஞ் சீலன்; உண்மையே உரைப்பவன்; விருந்தோம்பும் வித்த கன். அவனிடம் போனால் உமது சந்தேகந் தீரும்'' என்று கூறினார். இதைக்கேட்ட அந்தணர் பெருமகிழ்ச்சியடைந்தார். அதிதியை அன்றிரவு தன்னுடன் இருக்கச் செய்து அவருடன் உரையாடி மறு நாள் அவரை அனுப்பினார்.

வேதியர் அதிதி கூறியபடி நைமிசவனத்தை யடைந்து மகாபத்ம னுடைய உறைவிடத்தைச் சேர்ந்தார். நாகனுடைய மனைவி அவரை இனிது வரவேற்று உபசரித்தாள். வேதியர் ''அம்மா! உத்தமனும் தேவனுமான நாகனைக் காணும்பொருட்டு நெடுந்தூரத்திலிருந்து வந்தேன். அவர் எங்கே? என்று கேட்டார்.

''ஐயரே! என் கணவனார் சூரியனுடைய தேரைத் தாங்கும் பொருட்டுச் சூரியமண்டலம் போயிருக்கின்றார். அது ஒரு மாதம் செய்யவேண்டிய பணி, சென்று 15 நாட்கள் ஆயின; இன்னும் 15 நாட்களில் வருவார். நான் தங்களுக்கு என்ன செய்யவேண்டும்? சொல்லும்'' என்றாள்.

வேதியர் ''பதிவிரதையே! நான் இந்த கோமதி நதியின் மணல் திட்டில் வசிப்பேன். அவர் வரும் வரை அற்ப உணவைமட்டும் உண்டு காத்திருப்பேன். அவர் வந்தபின் மறவாமல் என்னுடைய வர்வைக் கூறுவாய்'' என்று சொல்லிவிட்டு மணல் திட்டில் இருந்தார்.

நாகனுடைய உறவினர்கள் அந்தணரிடம் வந்து அஞ்சலி செய்து 'தபோதனரே! நீர் பட்டினியிருந்தால் எமக்குப் பாவம் வரும். கருணைகூர்ந்து சிறிது உணவுகொள்ளும்'' என்று கூறி உபசரித்தார்கள்.

பதினைந்து நாட்கள் சென்றபின் சூரியனுடைய அனுமதிபெற்று மகாபத்மன் வந்தான். மனைவி அவனைத் தொழுது, தங்களைக்காண ஒரு அந்தணர் வந்து 15 தினங்களாக ஆகாரம் இல்லாமல் காத்திருக் கின்றார். அவரைத் தாங்கள் பார்த்து அவருக்கு ஆவனசெய்யும்'' என்றாள்.

நாகன் ''தேவீ! என்னை மனிதன் சந்திப்பதா? இது நன்றன்று'' என்று சிறிது சினத்துடன் கூறினான். நாகபத்தினி, ''வாயுவைப் புசிக்கின்ற மதிவாணரே! அவர் மனிதனாக இருந்தாலும் பக்தனாக விளங்குகின்றார். மழையை எதிர்பார்க்கும் சாதகப்பறவைபோல் உமது தெரிசனத்தைப் பெரிதும் விரும்பியிருக்கின்றார். நீர்

சீற்றம் அடைவது முறையன்று. அவரைப் பார்த்து அவருடைய விருப்பத்தை நிறைவேற்றும்'' என்றாள்.

நாகன் அந்தணரிடம் சென்று, அவரிடம் இன்சொல் கூறி உபசரித்தான். அந்தணர் ''நாகவேந்தே! நீர் ஆதித்தனிடம் போய் வந்தீரே! அங்கு என்ன அதிசயத்தைப் பார்த்தீர்? எனக்குச் சொல்லும்'' என்று கேட்டார்.

நாகன் ''வேதியரே! ஒரே உருளையையுடையதும், ஏழு பச்சைப் புரவிகள் பூட்டியதுமான தேரில் உலாவும் சூரியனிடத்தில் பல அதிசயங்கள் இருக்கின்றன. சூரியனுடைய கிரணங்கள் இல்லையென்றால் பயிர்கள் ஏது? உயிர்கள் ஏது? அவர் சுக்கிரன், புதன் முதலிய கிரகங்கட்கெல்லாம் ஆதாரமாக விளங்குகின்றார். நான் அவருடைய தேரைத் தாங்கிக் கொண்டிருந்தபோது ஒரு பெரிய ஆச்சர்யம் நடைபெற்றது. இன்னொரு சூரியனைப்போல ஒளியுடைய ஒருவர் அவரருகில் வந்தார். அவருடைய ஒளி கண்களைக் கூசுமாறு செய்தது. இரண்டாவது சூரியனைப்போல வந்த அவரை சூரிய பகவான் வலக்கை கொடுத்து எடுத்து அணைத்தார். சூரியனுடைய திருமேனியில் வந்தவர் ஒன்றுபட்டார். இதனைக்கண்ட நாங்கள் வியப்புற்றோம்.

நாங்கள் சூரியனை அதுபற்றிக் கேட்டோம். சூரிய பகவான், இவர் அக்கினியுமல்லர், தேவருமல்லர். இவர் வேதியர். வேதங்களை ஓதிக் கடுமையான நியமனத்துடன் *உஞ்சசிலத்தை யுண்டு, எல்லாவுயிர்களுக்கும் நன்மையே புரிந்தவர். இவர் ஒளிமயமாகி என்னையடைந்தார்'' என்று கூறினார்.

வேதியர் நாகனைப்பார்த்து ''அன்பரே! இது பெரிய ஆச்சர்யம். உமக்கு மங்களம் உண்டாகட்டும். நான் உம்மைப் பார்த்ததால் திருப்தி யடைந்தேன். உம்மிடம் விடைபெற்றுக் கொள்கின்றேன், என்று கூறிப் புறப்பட்டார்.

நாகன், ''அந்தணரே! நெடுந்தூரத்திலிருந்து வந்து பதினைந்து நாட்கள் எனக்காகக் காத்திருந்த நீர் ஏன் அவசரப்பட்டுப் புறப்படுகின்றீர்? இங்கு ஏன் வந்தீர்? என்னால் உமக்கு என்ன ஆகவேண்டும்? சொல்லும்'' என்று கேட்டான்.

வேதியர், ''நாகமூர்த்தியே! முத்திநெறியைக் கேட்க வந்தேன். நீர் கூறிய இந்த நிகழ்ச்சியால் என் ஐயந் தீர்ந்தது. உமக்கு நன்றி'' என்று·கூறிப் புறப்பட்டார். அவர் அதேபோல் உஞ்ச விருத்தியை மேற்கொண்டு தவஞ்செய்து பரகதி பெற்றார். (தொடரும்)

---

* உஞ்சசிலம் :—பொறுக்கிச் சேர்த்த தான்யம்.

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | அச்சில் |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. 1-00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற்படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | ரூ. 2-50 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | ரூ. 5-00 |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்றாவது தொகுதி (மூன்றாவது படைவீடு—பழநி) | ரூ. 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலை) | ரூ. 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோருடல் முதற்பாகம் | ரூ. 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆறும் தொகுதி (குன்றுதோருடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலையும்) | ரூ. 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. 0-50 |
| 13. | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. 0-50 |